## தெய்வம் எங்கே உள்ளது?

சென்னை ஸ்ரீவித்யாதீரத்தக் கழகம் சமீபத்தில கலலூரி மாணவரகளிடையே பேசசுப போட்டி ஒன்றுக்கு ஏற்பாடு செய்தது "இந்தியத தததுவ ஞானததின பல அமசஙகள்" என்பதே போட்டிக்கான விஷயம சென்னை டி ஜி வைஷ்ணவக் கலலூரியைச சேரந்த ஸ்ரீ ஜி பதமநாபன என்ற மாணவன இபபோட்டியில முதல பரிசைப பெற்ருன இவனது பேசசை மிகச சிறநததென அனைவரும பாராட்டினர அதிலிருநது சில பகுதிகள இஙகே தரபபடுகின்றன

"கடவுளை வழிபடுவதறகாக யாரும ஆலயஙகளுக்கோ, இமயமலைககோ செலல வேண்டியதிலலை அவனைக் காண முயலவது வெகு சுலபம ஏனெனில அவன உன உளளேயே இருககிருன" என்று கபீரதாஸ பாடுகிருர "கோவிலுககுபபோகிறேன என்ருே, மசூதிக்குச செலகிறேன என்ருே, அலலது யாததிரை ஸதலஙகளுக்கு பயணமாகிறேன என்ருே ஏன வாயபபநதல போடுகிருய? அவனதான உன மூசசிலேயே உறைகிருனே" என்றும அவர் முழங்குகிருர

அவனவன உள்ளததில வாசம செய்யும ஆண்டவனை அடைய மேறகொள்ளும யாததிரையே உலகில வெகு நீண்ட யாததிரை ஆண்டவனைக காண முறபடுவதால உலக மக்கள மறறவரகளைக் காண இயலாது எனப தலல அவனை முஸலீமகள "அலலா" என்று அழைககிருரகள, ஹிந்துககள அவனை "ஸ்ரீராமனாக"ப போறறுகிருர்கள இதே மாதிரிதான கிறிஸதவரகள் "இயேசு"வையும சீக்கியரகள தஙகள 'குரு'வையும வணஙகுகிருரகள இவரகள எலலாம ஒருவரதான, பல பெயரகளில ஆண்டவன அழைககபபட்டாலும உள்ளவன ஒருவனே 'மனிதரகள எநதெநத விதததில என்னை அணுகினாலும அநதநத விதததில நான் அவர்களுக்கு விளஙகுகிறேன' என்று அர்ஜுனனுக்குப பகவான கீதையில உபதேசிக்கிருர் "தாயிற சிறநததொரு கோயிலும இலலை தநதை சொலமிக்க மநதிரமுமிலலை" என்பது நமது ஆன்ருேர வாக்கு உஙகள பெற்ருேரகளைத தெயவஙகளாக வழிபடுஙகள தெயவததை எஙகேஙகேயோ தேடி அலையாதீரகள"

---நன்றி ("இந்தியன எகஸபிரஸ")

* * * *



## பிரம்மோத்ஸவம்

திருபபதியிலிருநது சுமார 40 கி.மீ. தொலைவில புததூர - சென்னை சாலையில உள்ள நாராயணவனததிலுள்ள தி தி தேவஸ்தானததாரின ஸ்ரீகலயாண வேஙகடேஸவரசுவாமி கோயிலின வருடாநதிர பிரமமோதஸவம 12-5-95 முதல 20-5-95 வரை வெகு விமரசையாகக கொண்டாடபபட உள்ளது

முக்கிய நிகழ்ச்சி நிரல

**12–5–95** - துவஜாரோஹணம

**16–5–95** - கருட சேவை

**19–5–95** - திருததேர, கலயாண்ருேதஸவம

**20–5–95** - துவஜாவரோஹணம

(தொடர் கட்டுரை)

# பகவத் கீதை

உமைப்பிரியன்

## எட்டாம் அத்தியாயம்

## அக்ஷரப்ரஹ்ம யோகம்

### பகவான் கூறுவது

*பரஸ்தஸ்மாத்து பாவோ அன்யோ*
*அவ்யக்தோ அவ்யக்தாத்ஸநாதன: ।*
*ய: ஸ ஸர்வேஷு பூதேஷு*
*நச்யத்ஸு ந வினச்யதி ॥ (20)*

"ஆனால் அத்தகு அவ்யக்தத் தைவிட மேலான, நிலையான வேறு ஒரு அவ்யக்தம் உள்ளது. உயிர்கள் யாவும் அழிந்தாலும், அது அழிவது இல்லை."

[இங்கு அவ்யக்தம் என்ற சொல் வருகிறது. அதாவது பிரம்மா உள்ளிட்டு எல்லா உயிர்களும் மறுபடியும் பிறக்க முடியா நிலைக்குச் செல்லும் போது, அந்த நிலைக்கு 'அவ்யக்தம்' என்று பொருளாகும். இந்தநிலையானது புலன்களுக் குத் தெரியாது. எல்லா உயிர் களுக்கும் ஒரு போக்கு உள் ளது. ஆனால் 'அவ்யக்தம்' என்பதற்கு வரவும் போக்கும் இல்லை.]

*அவ்யக்தோ அக்ஷர இத்யுக்தஸ்த*
*மாஹு: பரமாம் கதிம் ।*
*யம் ப்ராப்ய ந நிவர்தந்தே*
*தத்தாம பரமம் மம ॥ (21)*

"அவ்யக்தம், அக்ஷரம் என்று கூறுவதை பரமகதி என்று அழைப்பர். உயிர்கள் எதனை அடைந்து மறுபடியும் திரும்பி வருவதில்லையோ, அதுவே என்னுடைய பரமபதம் ஆகும்."

[அவ்யக்தம் என்பது புலன்க ளுக்கு எட்டாத நிலை என்று பொருள். இறைவனும் புலன்க ளால் அறியப்படாதவன். அக்ஷ ரம் என்றால் குறைவு படாதது என்பது பொருள். இறை வனும் எந்த நிலையிலும் குறைவோ, பழுதோ இல்லாத வன். இயற்கை என்பதற்கு அவ்யக்தம் என்ற குணம் அமை யலாம். ஆனால் அக்ஷரம் அதற் குப் பொருந்தாது. ஏனெனில் இயற்கையில் சேர்ந்துவிடும் - ஒடுங்கிவிடும் உயிர்கள் மறுபடி யும் தோன்றவே செய்கின்றன. ஆனால் பரப்பிரம்மம் எனப்ப டும் இறைவனுடன் சேர்ந்துவி டும் உயிர்களுக்கு மறுபடியும் பிறவி என்பதில்லை. ஆகவே பிரம்மம் என்பது உயர்ந்ததா கக் கருதப்படுவதால் அதுவே 'பரமபதம்' என்று போற்றப்படு கிறது.]

*புருஷ: ஸ பர: பார்த்த பக்த்யா*
*லப்யஸ்த்வனன்யயா ।*
*யஸ்யாந்த: ஸ்தானி பூதானி*
*யேன ஸர்வமிதம் ததம் ॥ (22)*

"அர்ச்சுனா! எந்த உயிர்களா னது யார் ஒருவனுள் இருக் கின்றனவோ, எந்த ஒருவ னுள் அவ்வுயிர்கள் யாவும் பரந் தும் உள்ளனவோ, அத்தகு பரம புருஷனை அனன்ய பக்தியால் அடையப்பெறலாம்."

[இச்செய்யுளில் இறைவனது தன்மை கூறப்படுகிறது. மன தில் இறைவனைப் பற்றிய சிந்தனையை ஒருமுகப்படுத்தி மனதை வேறொன்றிலும் சிதற விடாது மேற்கொள்ளும் ஈடு பாடே - பக்தியே அனன்ய பக்தி என்று கூறப்படுகிறது. கடலுக்குள் பல மலைகளும் உள்ளன. ஆனால் நீருக் குள் மூழ்கியிருக்கும் மலைக ளின் உள்ளே அந்நீரால் உள்ளே போகமுடியாது. ஆகவே கடல் நீர் எங்கும் பரந்து உள்ளது என்று சொல்லமுடியாது. இத னால் கண்ணுக்குத் தெரியும் பொருளாகிய கடலுக்கு எல்லா வற்றையும் அடக்கும் சக்தியோ எல்லாவற்றினுள்ளும் பரந்து, செல்லும் தன்மையோ இல்லை. ஆனால் கண்ணுக்குத் தெரியாத ஆகாயமாகிய வெட்டவெளியா னது மற்றைய பூதங்களாகிய பூமி, நெருப்பு, காற்று, நீர் ஆகியவற்றில் பரந்து உள்ளது. அதுபோலவே சிதாகாசமாகிய பரம்பொருளினுள் நகரும் நகரா பொருட்கள் யாவும் அடங்கி உள்ளன. அதுவே எங்கும் நீக் கமற பரந்தும் உள்ளது.]

*யத்ரகாலே த்வரைவ்ருத்தி*
*மாவ்ருத்திம் சைவ யோகின: ।*
*ப்ரயாதா யாந்தி தம் காலம்*
*வக்ஷ்யாமி பரதர்ஷப ॥ (23)*

"பரதகுலத்தில் உதித்த பெரு மகனே! எந்தக் காலத்தில் உடலை விட்டுப் போகின்ற துறவிகளாகிய யோகிகள் முக்தி எனும் பரமபதத்தை அடைகின் றனரோ, எந்தக் காலத்தில் அவ் வாறு உடலை விட்டுச் செல் பவர்கள் மறுபடியும் பிறக்கின் றனரோ, அந்த காலத்தைப்பற் றிச்சொல்கிறேன் கேள்"

[இச்செய்யுளில் துறவிக்ளின் இறுதி நிலையும் உயிர்களின் அடுத்த நிலையும் சுட்டிக்காட் டப்பட உள்ளது.]

அக்னிர் ஜ்யோதிரஹ: சுக்ல:
ஷண்மாஸா உத்தராயணம் ।
தத்ர ப்ரயாதா கச்சந்தி ப்ரஹ்ம
ப்ரஹ்மவிதோ ஜனா: ॥ (24)

"நெருப்பு, வெளிச்சம், பகல், சுக்லபட்சம், (வளர்பிறை காலம்) உத்தராயண காலத்தின் ஆறுமாதங்கள் ஆகியவற்றின் போது உடலை விட்டு மரணத்தைத் தழுவுகின்றனவர்கள் பிரம்மஞானிகளாவர். அவர்கள் பிரம்மமாகிய பரம்பொருளை அடைகின்றனர்."

தூமோ ராத்ரிஸ்ததா கிருஷ்ண:
ஷண்மாஸா தக்ஷிணாயம் ।
தத்ர சர்ந்த்ரமஸம் ஜ்யோதிர்
யோகீ ப்ராப்ய நிவர்ததே ॥ (25)

"புகை, இரவு, கிருஷ்ணபட்சம் (தேய்பிறை காலம்) தக்ஷிணாயணத்தின் ஆறுமாதங்கள் ஆகியவற்றின்போது உடலை விட்டு மரணத்தைத் தழுவுகின்ற (யோகிகளாகிய) துறவிகள் சந்திரனது ஒளியை அடைந்து மறுபிறவியைப் பெறுவார்கள்."

சுக்லக்ருஷ்ணே கதீ ஹ்யேதே ஜகத:
சாச்வதே மதே ।
ஏகயா யாத்யனாவ்ருத்திமன்யயா
வர்ததே புன: ॥ (26)

"இவ்வுலகத்தினுடைய ஒளியும், இருட்டும் ஆகிய இருவழிகளும் இயறகையில் நிரந்தரமானவை என்று உறுதியாக கருதப்படுகின்றது. ஒருவழியால் யோகி எனும் துறவியானவன் பிறவாமையைப் பெறுகின்றான். மற்றொரு வழியால் அத்துறவியானவன் மறுபடியும் பிறக்கும்படியான பிறவியைப் பெறுகின்றான்."

[மேற்கூறிய மூன்று செய்யுட்களில் 'ஒளி' வழி எனும் ஞான மார்க்கம் குறிப்பிடப்படுகிறது. 'ஒளி' வழிதான் பகற்பொழுது என்று சுட்டிக்காட்டப்படுகிறது. ஞானமார்கத்திற்கு எதிரான வழியானது 'இருளாக'க் கருதப்படுகிறது. இந்த இருளானது அறியாமை, வீணன சமய ஆசாரங்கள், குருட்டு நம்பிக்கைகள் என்று கருதப்படுகிறது. இவ்வழியில் செல்லும் பக்திமான்களும் மறுபிறவி என்பதையே அடைகின்றனர். இச்செய்யுட்களில் உத்ராயணம், வளர்பிறை, பகல் என்பதும், தட்சிணாயணம், தேய்பிறை, புகை என்பதும் முறையே ஞானமார்க்கத்தின் பேரொளியினையும், அடுத்தடுத்துப் பிறவிக்கு இட்டுச் செல்லும் அறியாமையினையும் விளக்கவே பயன்படுகின்றன.]

நைதே ஸ்ருதீ பார்த்த ஞானன்
யோகீமுஹ்யதி கஸ்சன ।
தஸ்மாத் ஸர்வேஷு காலேஷு
யோகயுக்தோ பவார்ஜுன் ॥ (27)

"மேற்கூறிய இரண்டு வழிகளையும் உண்மையாக அறிந்த துறவியானவர்கள் மோக மார்க்கத்தை அடையமாட்டார்கள். ஆகையால் பார்த்தா, நீ என்றென்றும் யோகத்திலேயே ஈடுபாடு உடையவனாகி விளங்குவாயாக."

[இந்த உடலால் எந்தத்தொழிலைச் செய்து கொண்டிருந்தாலும், எந்த வகையான துன்பங்களைப் பட்டுக்கொண்டிருந்தாலும், அவன் உள்ளம் மட்டும் தியான வழியில் அந்தப் பரம்பொருளையே நினைத்திடல் வேண்டும். இவ்வாறு எந்தக் கணமும் மனதை, சிந்தனையை யோக வழியில்



நிலைநிறுத்திப் பயிற்சி செய்பவனே, (மேற்கூறிய) ஒளிவழியில் செல்ல தகுதியுடையவராகின்றான். ]

வேதேஷு யக்ஞேஷு தப: ஸு சைவ
தானேஷு யத்புண்யபலம் ப்ரிதிஷ்டம் ।
அத்யேதி தத்ஸர்வமிதம் விதித்வா
யோகிபரம் ஸ்தான முபைதி சாத்யம் ॥ (28)

"(ஞானமார்க்கத்தைத் தெரிந்து கொண்ட) துறவியானவன், வேதங்களைப் பயிலுவதாலும் தானதர்மங்களைச் செய்வதாலும், வேள்விகளைப் புரிவதாலும் கிடைக்கக்கூடிய புண்ய பலன்களையெல்லாம் விட, அவற்றையும் கடந்து, ஆதியாகிய அந்தப் பரம்பொருளை சென்றடைகின்றான்."

[வேதம், யாகம், கொடை ஆகிய சடங்குகள் நிரம்பிய வழிகள் தந்திடும் நிலையில்லா இன்பங்களில், ஞானமார்க்கத்தின் இன்பத்தைத் தெரிந்து கொண்ட துறவியானவன் தன்னை இழக்கமாட்டான். ஆகவே நிலையான இன்பத்தைத் தந்திடும் முக்திக்கு வழிகாட்டிடும் தியான வழியில் நின்று அத்துறவியானவன் அவ்இறைவனை அடைந்து வெற்றி பெறுகின்றான்.]

இதி ஸ்ரீமத் பகவத் கீதாஸு உபநிஷத்ஸு
ப்ரஹ்ம வித்யாயாம்
யோக சாஸ்த்ரே ஸ்ரீக்ருஷ்ணார்ஜுன
ஸம்வாதே
அக்ஷரப்ரஹ்ம யோகோ நாம
அஷ்டமோ அத்யாய: ॥

(பிரம்ம ஞானத்தைச் சொல்வதும், யோக சாஸ்திரமானதும், ஸ்ரீகண்ணனுக்கும் அர்ச்சுனனுக்கும் இடையே நடக்கும் உரையாடலுமாகவும் விளங்கிடும் பகவத் கீதை எனும் உபநிடதத்தில் உள்ள 'அக்ஷர ப்ரஹ்ம யோகம்' எனும் எட்டாம் அத்தியாயம் இதுவாகும்.)

(தொடரும்)



## ஸ்ரீ கல்யாண வேங்கடேஸ்வரசுவாமி கோயில்

### ஸ்ரீநிவாசமங்காபுரம்

**ஆர்ஜித ஸேவைகள் :**

1. நித்ய அர்ச்சனை, (ஒரு வருடத்திற்கு) ரூ. 42/-
2. நிரந்தர நித்ய அர்ச்சனை, (ஆயுள் முழுவதும்) ரூ. 542/-
3. கல்யோணுத்சவம், (நாள் தோறும்) ரூ. 300/-
4. அபிஷேகம் (வெள்ளிக்கிழமைகளில் மட்டுமே) ரூ. 100/-

**தளிகைகள் (நைவேத்தியங்கள்)**

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1. | தத்யோதனம் | ரூ. 75/- | 5. | ஷீரா | ரூ.400/- |
| 2. | புளியோதரை | ரூ.100/- | 6. | தோசை(படி) | ரூ.400/- |
| 3. | பொங்கல் | ரூ.200/- | 7. | கேஸரிபாத் | ரூ.300/- |
| 4. | சர்க்கரைப்பொங்கல் | ரூ. 35/- | 8. | ஸாகரபாத் | ரூ.250/- |

மூன்றுநாட்களுக்கு முன்பேயே மேற்படி ஸேவைகள் மற்றும் தளிகைகளுக்கான தொகையினைச் செலுத்துதல் வேண்டும்.

(திருப்பதி - சித்தூர் நெடுஞ்சாலையில் திருப்பதியிலிருந்து சுமார் 10 கி.மீ. தொலைவில் இத்திருத்தலம் உள்ளது).

### காலை எழுந்தவுடன்...

காலை துயில் நீங்கிக் கண் விழித்தவுடன், அந்நாளில் நலம் சூழக் காண ஏற்றவை.

தன் வலக்கரம்
கண்ணாடி
மனைவி
தாமரை
தங்கம்
தீபம்
தீ
சூரியன்
கடல்
வயல்
கன்றுடன் பசு
முகில் சூழ்மலை
செஞ் சந்தனம்
சிவலிங்கம்
மிருதங்கம்

ஆதாரம் :
சேலம் சமயப்பிரச்சார வெளியீடு.
தகவல் : ஆர்.பி. சாரதி

# தொண்டரடிப்பொடியாழ்வார்

திரு. ச. முத்துச்சாமி - புத்தூர்.

## முன்னுரை :

வைணவத்தை வளர்க்க ஆழ்வார்கள் பாடுபட்டனர். சமயம் வளர்க்கும் உயரியநோக்கத்தோடு அவர்கள் பாடிய பாடல்கள் தமிழுக்குப் பெருஞ்சிறப்பினை அளித்தன. ஆழ்வார்கள் மனிதரைப் பாடாமல் கோயில் கொண்டு அருள்புரிந்த திருமாலையே பாடி உயர்ந்தவர்கள் ஆனார்கள். தொண்டரடிப்பொடியாழ்வார் மாணிக்கவாசகரைப் போலத் திருப்பள்ளி எழுச்சியை இறைவன் மீது பாடி மகிழ்ந்தார். அவர் தம் பாடல்களின் பக்திப்பெருக்கினைக் காண்போம்.

## பிறப்பு :

சோழநாட்டில் மண்டங்குடியில் மறையவர் மரபில் அவதரித்தார். மார்கழிமாதம் கேட்டை நட்சத்திரத்தில் இறைவனது வனமாலையின் அம்சமாக அவதரித்தார். விப்பிர நாராயணன் என்பது இவரது இயற்பெயர். எட்டெழுத்தின் பெருமையை உணர்ந்து திருவரங்கப்பெருமானையே உள்ளம் நாட அவனது திருவடிகளைப் பணிந்தார். திருவரங்கத்தில் திருநந்தவனம் அமைத்து பூமாலைக் கட்டி இறைவனுக்குச் சூட்டி வந்தார்.

## பாடிய பாசுரங்கள் :

இவர் திருமாலை, திருப்பள்ளியெழுச்சி என இரண்டு பகுதிகளாகப் பாசுரங்களைப் பாடியுள்ளார். திருமாலை 45 பாசுரங்களையும், திருப்பள்ளி எழுச்சி 10 பாசுரங்களையும் கொண்டது. அரங்கநகர்ப் பெருமானைப் பற்றிய அழகிய பாடல்களின் மாலையாகத் திகழ்வதால் இப்பெயர் பெற்றது. இவரது காலம் எட்டாம் நூற்றாண்டு ஆகும்.



இந்திரலோகம் ஆளும்
அச்சுவை பெறினும் வேண்டேன்
அரங்கமாநகருளானே

'திருவரங்கத்தில் கோயில் கொண்டுள்ள எம்பெருமானே! வேதங்களில் மக்களின் காலம் நூறு ஆண்டுகள் என விதிக்கப்பட்டுள்ளது. பாதிக்காலம் தூக்கத்தில் கழிந்துவிடும். பசியும், நோயும், வயோதிகமும் ஆகிய துன்பங்கள் நிறைந்த இப்பிறவியை வேண்டேன் என்கிறார்.

வேதநூல் பிராயம் நூறு மனிசர்-
தாம் புகுவரேலும்
பாதியும் உறங்கிப்போகும்
நின்றதில் பதினையாண்டு
பேதைபாலகனதாகும் பிணி
பசிமூப்புத் துன்பம்
ஆதலால் பிறவிவேண்டேன்
அரங்கமாநகருளானே!- 874

## திருமாலை :

'பசுமை பொருந்திய பெரிய மலை போன்ற மேனியும், பவளவாயும், தாமரை மலர் போன்ற கண்களையும் உடையவனே! அமரர்களுக்குத் தலைவனே, இடையர்களின் குலக்கொழுந்தே! உன்னை வணங்கும் போது பெறும் இன்பத்தைத் தவிர யான் போய் இந்திரலோகத்தை ஆளும் பெரும் பதவியை நான் வேண்டேன் என்னை ஆட்கொள்வாயாக, திருவரங்கப்பெருமானே' என்று கூறுகிறார்.

பச்சைமாமலை போல் மேனி
பவளவாய் கமலச்செங்கண்
அச்சுதா அமரர்ஏறே ஆயர்தம்
கொழுந்தே என்னும்
இச்சுவை தவிர யான் போய்

திருவரங்கத்தில் உள்ள சோலைகளின் அழகைப்பற்றிக் கூறும் பாடல் இது.

வண்டினம் முரலும் சோலை
மயிலினம்
ஆலும் சோலை
கொண்டல் மீதணவும் சோலை
குயிலினம் கூவும் சோலை
அண்டர்கோன் அமரும் சோலை
அணிதிருவரங்கம் என்னா
மிண்டர் பாந்துண்ணும் சோற்றை
விலக்கிநாய்க்கிடுமினீரே - 885

"கடலின் கரிய நிறத்தையுடைய பெருமானே! மேற்குத் திசையில் திருமுடியைவைத்தும், கிழக்கில் திருவடியை நீட்டியும், வடக்கில் தனது பின்புறத்தைக் காட்டியும், தெற்குத்

திசையில் இலங்கையைப் பார்த்தபடி பள்ளியறையில் நித்திரை செய்யும் உனது கோலத்தை நான் பார்ப்பதால் எனது உடலும் உருகுகின்றதே" என்பதாக அமைந்த பாடல் இது.

குடதிசை முடியைவைத்துக்
குணதிசைபாதம் நீட்டி
வடதிசை பின்புகாட்டித் தென்திசை
இலங்கைநோக்கி
கடல்நிறக் கடவுள் எந்தை
அரவுணைத்துயிலுமாகண்டு
உடலெனக் குருகுமாலோ
என்செய்கேன்உலகத்தீரே - 890

"கங்கையினும் புனிதமான காவிரியாற்றின் நடுவில் வெள்ளம் பெருகிப்பாய்கின்ற சோலைகள் நிறைந்த திருவரங்கத்தில் எம்பெருமான் சயனத்திருக்கோலத்தில் காட்சி தருவதைக் கண்ட நான் அவரை எவ்வாறு மறைந்து வாழமுடியும். நான் அறிவற்ற பேதை. அவனே என்தெய்வம்" என உள்ள உறுதியோடு கூறுகிறார்.

கங்கையிற் புனிதமாய காவிரி
நடுவு பாட்டு
பொங்குநீர் பரந்து பாயும்
பூம்பொழில் அரங்கந்தன்னுள்
எங்கள் மால் இறைவன் ஈசன்
கிடந்ததோர் கிடக்கை கண்டும்
எங்ஙனம் மறந்து வாழ்கேன்
ஏழையேன் ஏழையேனே - 894

"மேகத்தின் கரிய நிறத்தை உடையவனே, கண்ணபிரானே! ஊரில் எனக்கு காணி நிலமும் இல்லை. உற்றார் உறவினர்களும் இல்லை. இவ்வுலகில் உன்னுடைய திருவடிகளையும் தஞ்சம் எனப் பற்றுதவனாகவும் இருக்கிறேன். உன்னை எண்ணிக கதறுகின்றேன். அரங்கத்தில் கோயில் கொண்டுள்ள எம்பெருமானே, உன்னைத் தவிர எனக்கு யார் உளர்" என அவனை நோக்கிப்பாடும் பாடலாவது:

"ஊரிலேன் காணியில்லை உறவு
மற்றொருவர் இல்லை
பாரில் நின்பாதமூலம் பற்றிலேன்
பரம மூர்த்தி
காரொளிவண்ணனே ஓ கண்ணனே
கதறுகின்றேன்
ஆருளர்களைகண் அம்மா
அரங்கமாநகருளானே -900

## திருப்பள்ளியெழுச்சி

ஆழ்வாரின் திருப்பள்ளியெழுச்சிப் பாடல்கள் இனிமையும் எளிமையும் நிறைந்தவை. விடியற்காலையில் இறைவனைத் துயிலெழுப்பும் பத்துப்பாடல்களைப் பாடித்தொழுதால் நம்பிறவித்துன்பங்கள் யாவும் நீங்கும்.

"சூரியன் கிழக்கில் சிகரத்தின் உச்சியில் தோன்றினான். இருள் நீங்கி ஒளிபரவியது. காலைப் பொழுதைக் கண்ட மலர்கள் விரிந்து தேனைச் சொரிந்தன. தேவர்களும் அரசர்களும் திரண்டு வந்து கூடி உள்ளார்கள். அவர்களுடன் வந்த அவர்களின் வாகனமாகிய ஆண்யானைகளும், பெண் யானைகளும் சேர்ந்து வந்துள்ள ஒலியும் வாத்தியக்கருவிகளின் ஒலியும் அகலவீசுகின்ற கடல்போல உள்ளது இத்திருவரங்கம். அங்குக் கோயில் கொண்டு விளங்கும் திருவரங்கப்பெருமானே! பள்ளி எழுந்தருளுவாயாக" எனப்பாடுகிறார்.

கதிரவன் குணதிசைச் சிகரம்
வந்தணைந்தான்
கனஇருள் அகன்றது காலையும்
பொழுதாய்
மதுவிரிந்து ஒழுகினமாமலரெல்லாம்
வானவர் அரசர்கள் வந்து
வந்து நீண்டி
எதிர்திசை நிறைந்தனர்
இவரோடும் புகுந்த
இருங்களிற்று ஈட்டமும்
பிடியொடுமுரசும்
அதிர்தலில் அலைகடல்
போன்றுளது எங்கும்
அரங்கத்தம்மா பள்ளி
எழுந்தருளாயே- 917

"பறையும், மத்தளமும்,வாத்தியமும், வீணையும், புல்லாங்குழலும் ஆகிய இசைக்கருவிகளின் ஒலி எங்கும் முழங்குகின்றது. இசை கூட்டிப்பாடுகின்ற கின்னரர், கருடர், கந்தர்வர், மாதவர், வானவர், சாரணர், இயக்கர், சித்தர் ஆகியோரும் உன் திருவடிகளைத் தொழுவதற்காக இரவெல்லாம் வருந்தி மயங்கி நிற்கின்றனர். ஆதலால் அவர்களுக்கு உன் பகல் காட்சியை அருள, அரங்கத்துப் பெருமானே! பள்ளி எழுந்தருளாயே".

ஏதமில் தண்ணுமை எக்கம்
மத்தளியே

யாழ்குழல் முழவமோடு
இசைதிசைகெழுமி
கீதங்கள் பாடினர் கின்னரர்
கெருடர்
கந்தருவரவர் கங்குலுள்எல்லாம்
மாதவர் வானவர் சாரணர் இயக்கர்
சித்தரும் மயங்கினர்
திருவடிதொழுவான்
ஆதலில் அவர்க்கு நான்
ஓலக்கம் அருள
அரங்கத்தம்மா பள்ளி
எழுந்தருளாயே - 925

"காவிரி நீரால் சூழப்பட்ட திருவரங்கத்தில் துயில் கொண்டுள்ள பெருமானே! மணமுள்ளதாமரை மலர்கள் மலர்ந்து விட்டன. கதிரவன் கடலில் உதயமாகிவிட்டான். கன்னிப்பெண்கள் நீராடி ஆடைகளை உடுத்திக்கொண்டு கரையேறி விட்டார்கள். தொடுக்கப்பெற்ற திருத்துழாய் மாலையும் பூக்குடலையும் விளங்குகின்ற தோளையுடைய தொண்டர் அடிப்பொடி என்னும் பெயரையுடைய எனக்கு அருள்புரிந்து உன்னுடைய அடியார்களுக்கு ஆளாக்க வேண்டும். அதற்காகத் திருப்பள்ளி எழுந்தருளுவாயாக" என்று இறுதியாகப் பாடுகிறார்.

## முடிவுரை :

ஆழ்வார் தன் இயற்பெயரைத் தவிர்த்து தொண்டர் அடிப்பொடி எனத் திருநாமம் பூண்டு அரங்கனையே வணங்கும் உள்ளம் உடையவராக விளங்கினார். அவர்தம் பாடல்கள் பக்திச்சுவைமிக்கவை. படிப்போரின் உள்ளம் நெகிழச்செய்யவல்லவை. அவ்ஆழ்வார் அருளிய பாசுரங்களைப்பாடி அரங்கனின் திருவருளைப்பெறுவோமாக! ❂

---

# வைணவ வழக்குச்சொற்களும் பொருள்களும்

திரு. மா. வரதராஜன் - திருப்பதி.

## க



| | | |
|---|---|---|
| கங்கணம் | - | தோள்வளை; கைவளைக்கும் பேர் |
| கங்கிருள் | - | ராத்திரி இருள் |
| கங்குல் | - | இரவு |
| கங்கையான் | - | கங்கையைத் தலையிலே தரித்திருக்கும் சிவபெருமான் |
| கச்சி | - | திருவெஃகா, காஞ்சியிலுள்ள திவ்யதேசம் |
| கச்சு | - | வேஷ்டிக்குமேலே இடுப்பில் இறுகக்கட்டிய துண்டு; கொங்கைக்கச்சு; ரவிக்கை |
| கசம் | - | கயம்; குளம் |
| கசிகை | - | ஈரமாகை; நெஞ்சு நெகிழ்கை |
| கசை | - | பசை; சாட்டை |
| கஞ்சன் | - | கம்சன் |
| கட்கண் | - | ஊனக்கண்; புறக்கண் |
| கட்கிலி | - | கண்ணுக்கு இலி; புறக்கண்ணுக்குத் தோற்றாதவன். |
| கட்டக்குடியன் | - | துன்பப்படுகின்ற குடும்பி; பொல்லாதவன் |
| கட்டடங்க | - | முழுவதும் |
| கட்டணம் | - | கட்டடம் |
| கட்டணமாய்க் கிடத்தல் | - | அசையாது/விட்டுப்போகாது கிடத்தல் |
| கட்டம் | - | கஷ்டம் |
| கட்டவிழ் தாமரை | - | அலர்ந்த தாமரை |
| கட்டளை | - | திருத்தம்; அளவு; முறைமை |
| கட்டளைப்படுதல் | - | ஒழுங்குபடுதல் |
| கட்டி | - | கற்கண்டு; கருப்புக்கட்டி |
| கட்டிக்கொண்டு | - | பேணிக்கொண்டு |
| கட்டிப்பொன் | - | சுத்தம் செய்யாத பொன் |
| கட்டுரை | - | வெறும் பேச்சு; நற்சொல்; தெளிவுச்சொல் |
| கட்டுவிச்சி | - | குறிசொல்லுகிறவள் |
| கட்டெழில் சோலை | - | கடி கட்டாய், பரிமளம் உள்ள சோலை; கட்டு-செறிவு, நெருக்கம் |
| கட்டெறும்பு | - | முறியடிக்கும் எறும்பு; முறியக்கடிக்கையாவது துண்டிக்கை |
| கட்டேறி | - | கொட்டாவி கொள்ளாமல் மூரிநிமிராதே கட்டி வைத்தாற்போல் அசையாதிருத்தல் |
| கடக்கை | - | தாண்டுகை |
| கடக்க இருத்தல் | - | விலகி இருத்தல் |
| கடக்க வர்த்தி | - | தூரத்தில் இரு |
| கடக்களிறு | - | மதயானை |
| கடக்கிடல் | - | கணக்கிடல்; கணக்குப் பார்த்தல் |
| கடகு | - | காப்பு; காரணம் |
| கடத்தல் | - | அளத்தல் |

கடந்தது - அழித்தது; முடித்தது
கடந்தநம்பி - அழியச்செய்த நம்பி
கடம்பு - கடம்ப மரம்
கடமை - வரியிறுக்கை; வட்டியும் வரியும் கொடுக்கை
கடம்பெரும் படை - கடலைக் காட்டிலும் பெரிய படைவெள்ளம்
கடல் மண் - கடல் சூழ்ந்த பூமி
கடல் வட்டம் - கடலுக்கு உட்பட்ட பூமி
கடலமுதம் - கடலைக் கடைந்து வாங்கிய அமுதம்
கடவது - உரியது; தக்கது
கடவார் - உரியவர்
கடவுள் - தெய்வம்
கடனாடு - கொடுத்த கடனுக்குப்போலே அவசியம் அநுபவிக்கத்தக்க தான நாடு
கடாகின்றவாறு - நடத்தும் விதம்
கடாம் - மதம்; ஆண்ஆடு; வினா
கடாய - கடத்தலாய் அளக்கை
கடாரநீர் - கொப்பரை நீர்
கடி - சிறப்பு; தேன்; பெருமை; அழகு; ஒளி; புதுமை;' செவ்வி; பரிமளம்
கடிக்கூறு - கடித்தகூறு - எச்சிலான கூறு
கடிப்பித்தல் - நீக்குதல்
கடிப்பு - குண்டலம்
கடிச்சோதி - கடி-இடுப்பாய், அதன் ஒளி
கடிநகர் - சிறப்புடைய நகர்
கடியார் காளையர் - நெஞ்சில் நன்மையின்றிக்கே பிறரை நலிய நலிய இளகிப் பதியாநின்ற பருவத்தை உடையவர்
கடிறு - யானை; கெடிறு என்கிற மீனைக் கெளிறு என்றும் கருடனைக் கருளன் என்றும் சொல்லுவது போல் களிறு என்பது கடிறு ஆயிற்று.
கடுநடையிட்டுச்செல்லல் - விரைந்து செல்லல்
கடுங்கணை - கொடிய அம்பு
கடுவன் - ஆண் குரங்கு
கடைக்கூட்டு - முடித்துத்தருகை; நடத்துகை
கடைகட்டுகை - நிறுத்துகை
கடைக்கட்பிடி - கடைபோகப்பிடி. அதாவது நடுவேவிடாதே முடியப்பிடி
கடைக்கொண்டு கைதொழும் பக்தர்கள் - எல்லார்க்கும் கடைசியிலே தங்களையிட்டுக் கொண்டு கைதொழும் பத்தர்கள்
கடைக்கூழை - எல்லார்க்கும் பின்னே வருகிற திரள்
கடைகயிறு - தயிர் கடையும் கயிறு
கடைச்சரி - கடைச்செறி; ஒருவிரலிலே கீழும் மேலும் இடுகிற மோதிரம்
கடைசிமார்கள் - பள்ளச்சிகள்; கடைசி ஜாதிமார்
கடைகூட - இரண்டு பக்கமும் குவிய
கடைத்தலை - வாசல்; தலைக்கடை
கடைதாம்பு - கடைகிற கயிறு
கடைதிறவாய் - கதவைத் திறவாய்; கடைவாசலாய் அங்குள்ள கதவு
கடைப்பணிக் கூட்டம் - ஆபரணங்களின் நுனிகூடுமிடம், பிடரியில் கொக்குவாய் முதலானவை உள்ள ஆபரணங்கள் செய்யும் இடம்
கடைப்பிடி - ஆயுள் வரை விடாமல் பிடித்திருப்பது
கடையர் - மூங்கிற்பறையர்; மருத நிலத்தவர்
கடையா - கறக்கிற மூங்கில் குழாய்
கடைவெண்ணெய் - கடைந்தெடுத்த வெண்ணெய்
கண்கொளா - கண்ணுக்குக் காண முடியாதபடி
கண்செறியிடுகை - கண்மூடியபடி
கண்குழிவு - துக்கம்
கண்செறிவு - கண் பரந்திருக்கை
கண்டகர் - கண்டகம் - முள். அது போல இருப்பவர்
கண்டகாலம் - நிர்ணயித்தகாலம்; ஏற்பட்ட காலம்
கண்டது - ஏற்பட்டது
கண்டபடி - மனம் போல்
கண்டசீர் - கேட்டுப்போகையன்றிக்கே கண்ணாலே கண்டு அநுபவிக்கும்படியாக
கண்டசுவடு - அடையாளம்
கண்டதோடு - நம்பிக்கையில் பயன் கண்டபோது
கண்டம் - கழுத்து
கண்டல் - தாழை
கண்டிகை - கண்டாபரணம்; கழுத்துக்கு இடும் ஆபரணம், கண்டிகை ஆரம்; மகர கண்டி போன்ற ஆபரணம்
கண்டிலோமீ - கண்டிலோமே
கண்டீரம் - ஆசையை உண்டாக்குவது
கண்டு - கற்கண்டு
கண்டோமுக்கு - கண்ட நமக்கு
கண்ணகம் - கண்ணில்
கண்ணமங்கை - 108 திவ்ய தேசங்களில் ஒன்று
கண்ணறையர் - குருடர்; கண்ணோட்டமற்றவர்
கண்ணழிக்கல் - தயை பண்ணுதிருத்தல்
கண்ணன் - கண் போன்று நிர்வாககன்; கிருஷ்ணன்
கண்ணன் குறுங்குடி - 108 திவ்ய தேசங்களுள் ஒன்று

# செய்திச் சுருக்கம்...

## திருமலையில்....

அண்மையில் திருப்பதி அடுத்த திருச்சானூரில் நடைபெற்ற ஸ்ரீயாகத்தில் பங்கேற்க வருகை புரிந்த ஆந்திர மாநில முதல்வர் திரு. என்.டி. ராமாராவ் அவர்கள், திருமலையில் உள்ள 'ஸப்தகிரி' சத்திர கட்டிட வளாகத்தில் 'மந்தாகினி' எனும் ஆறுவது கட்டிடத்தைத் திறந்துவைத்தார். சுமார் ரூ. 1.80 கோடி செலவில் கட்டப்பட்ட இந்தக் கட்டிடத்தில் யாத்திரிகர்கள் இலவசமாகத் தங்கக்கூடிய 101 அறைகள் உள்ளன.

* * *

சுமார் ரூ. 2.15 கோடி செலவில் பத்தாண்டுகளுக்குள் கட்டி முடிக்கப்பட உள்ள, கழிவு நீரை தூய்மைப்படுத்தும் மைய வளாகத்திற்கு திரு. என்.டி. ராமாராவ் அவர்கள் அடிக்கல் நாட்டினார்.

* * *

திருமலைக்கோயிலின் தங்கம் மற்றும் வெள்ளித் தேர்கள் நிறுத்துமிடமான 'ரத மண்டபத்'தினை முதல்வர் அவர்கள் திறந்துவைத்தார். பொதுமக்கள் ரதங்களைக் காணும் வகையில் இம்மண்டபம் அமைக்கப் பட்டுள்ளது.

* * *



திருமலைக் கோயிலுக்கு 17-3-94 அன்று மாலை திரு. என்.டி. ராமாராவ் அவர்கள் வருகை புரிந்தார். அதுபோது முதல்வர் அவர்கள் தக்க கோயில் மரியாதைகளுடன் தேவஸ்தான உயர் அலுவலர்களால் வரவேற்கப்பட்டார். தரிசனத்திற்குப் பிறகு ரங்கநாயகுலு மண்டபத்தில் தேவஸ்தானத்தின் சார்பில் கோயில் பிரஸாதங்களும், தேவஸ்தான சமய நூல்களும், ஒலி, ஒளிப் பேழைகளும் வழங்கப்பட்டன. அடுத்தநாள் காலை சுப்ரபாத சேவையில் முதல்வர் அவர்கள பங்கேற்றார். முதல்வரின் வருகையின் போது ஆந்திரமாநில அறநிலையத்துறை ஆணையர் திரு. சி.எச். வெங்கடபதிராஜு, ஐ.ஏ.எஸ். அறநிலையத்துறை அமைச்சர் திரு. சிம்மாத்திரி சத்யநாராயணா, கல்வி அமைச்சர் திரு. ஜி. முத்துகிருஷ்ணமநாயுடு, வருவாய்த் துறை அமைச்சர் திரு. சந்திரபாபுநாயுடு ஆகியோர் உடன் இருந்தனர்.

* * *

## பதவி உறுதிமொழி

தி.தி. தேவஸ்தானத்தின் சிறப்பு அமைப்புக்குழுவின் உறுப்பினர்களாக ஆந்திர மாநில அறநிலையத் துறை அமைச்சர் திரு. சிம்மாத்திரி சத்யநாராயண, தி.தி. தேவஸ்தான செயலாட்சித்தலைவர் திரு. என். ரமேஷ்குமார், ஐ.ஏ.எஸ்., ஆந்திரமாநில அரசு அறநிலையத்துறை ஆணையர் திரு. சி. எச். வெங்கடபதிராஜு ஆகியோர் நியமிக்கப்பட்டுள்ளனர். மேற்படி உறுப்பினர்கள் தங்கள் உறுப்பினர் பதவிகளுக்கான உறுதிமொழியை அண்மையில் திருமலைக்கோயில் சன்னதியில் மேற்கொண்டனர்.

* * *

## குங்கும பிரஸாதம்

திருச்சானூரில் உள்ள தி.தி. தேவஸ்தானத்தாரின் ஸ்ரீபத்மாவதி அம்மையார் திருக்கோயிலில், இனிமேற்கொண்டு கோயில் பிரஸாதமாக குங்குமப் பொட்டலங்கள் பக்தர்களுக்கு வழங்கப்படும்.

* * *

## நன்கொடை

தி.தி. தேவஸ்தானத்தாரால் திருமலையில் நாளும் மேற்கொள்ளப்பட்டுவரும் நித்ய அன்னதான திட்டத்திற்கென பம்பாயைச் சார்ந்த திரு. சிவ பாலசுப்ரமண்யம் எனும் தொழிலதிபர் அண்மையில் ரூ. 10 இலட்சம் வழங்கினார்.

* * *

## பாராட்டு

அண்மையில் திருமலை 'க்யூ' கட்டித்தொகுதியில் விசாகப்பட்டனத்தைச் சார்ந்த பக்தரொருவர் மறந்து விட்டுச் சென்ற ரூ. 40,000 கொண்ட பணப்பையினைக் கண்டெடுத்து தி.தி. தேவஸ்தான உயர் அலுவலரிடம் ஒப்படைத்த தேவஸ்தான ஊழியரான இளநிலை எழுத்தர் தி. எல்லப்பா அவர்களை மேலாண்மை பாராட்டியது.

* * *

## ஆராதனை விழா

அண்மையில் சென்னை திருவல்லிக்கேணியில் புரந்தரதாஸரின் ஆராதனை விழா ஒன்று, தி.தி. தேவஸ்தானத்தாரின் தாஸ ஸாகித்ய துறையின் சார்பில் வெகுச் சிறப்பாக நடைபெற்றது. இதுபோது சமய நிகழ்ச்சிகளும் தேவஸ்தான சமய நூல் விற்பனையும் மேற்கொள்ளப்பட்டன.

* * *

## பிரம்மோத்ஸவம்

திருப்பதியிலுள்ள தி.தி. தேவஸ்தானத்தாரின் ஸ்ரீ கோதண்டராம சுவாமி கோயிலின் வருடாந்திர பிரம்மோத்ஸவம் 28-3-95 முதல் 6-4-95 வரை வெகுச்சிறப்பாகக்கொண்டாடப்பட உள்ளது. 1-4-95, 3-4-95 மற்றும் 5-4-95 ஆகிய நாட்களில் முறையே நடைபெறும் கருட வாகனம், ஹனுமந்த வாகனம், திருத்தேர் ஆகியன இப்பிரமோத்ஸவத்தின் சிறப்பு நிகழ்ச்சிகளாகும்.

* * *

திருப்பதியிலிருந்து சுமார் 60 கி.மீ. தொலைவில் திருப்பதி - ஊத்துக்கோட்டை பேருந்து வழிச்சாலையில் உள்ள நாகலாபுரம் எனும் ஊரில் உள்ள தி.தி. தேவஸ்தானத்தாரின் ஸ்ரீவேதவல்லி சமேத ஸ்ரீவேதநாராயண சுவாமி திருக்கோயிலின் வருடாந்திர பிரம்மோத்ஸவம் 14-4-95 முதல் 25-4-95 வரை வெகு விமர்சையாகக் கொண்டாடப்பட உள்ளது.

* * *

உத்திரபிரதேச மாவட்டம் ரிஷிகேஷ் எனும் இடத்திலும், ஆந்திரமாநிலம் சித்தூர் மாவட்டத்திலுள்ள (புத்தூருக்கு அருகில்) நாராயணவனத்திலும் உள்ள தி.தி. தேவஸ்தானத்தாரின் ஸ்ரீவேங்கடேஸ்வர சுவாமி கோயில்களின் வருடாந்திர பிரம்மோத்ஸவங்கள் 11-5-95 முதல் 20-5-95 வரை வெகுச் சிறப்பாகக்கொண்டாடப்பட உள்ளன.

* * *

## வசந்தோத்ஸவம்

திருமலையில் ஸ்ரீவேங்கடேஸ்வர சுவாமி கோயிலின் வருடாந்திர 'வசந்தோத்ஸவ' திருவிழா 13-4-95 முதல் 15-4-95 வரை மூன்று நாட்களுக்குக் கொண்டாடப்படும்.

# ஸ்ரீயாகம்

உலகில் அமைதி நிலவவும், வளம் பெருகவும் திருமலை திருப்பதி தேவஸ்தானம் 13-3-95 முதல் 17-3-95 வரை திருப்பதி அடுத்துள்ள, ஸ்ரீபத்மாவதி தாயார் கோயில் கொண்டுள்ள திருச்சானூர் தோலப்பத் தோட்டத்தில் திரிதண்டி ஸ்ரீமந் நாராயண இராமானுஜ சின்ன ஜீயர் தலைமையில் சதுர்விம்சதி 'ஸ்ரீயாகம்' எனும் புனித வேள்வி வெகுச்சிறப்பாக நடைபெற்றது. இவ்வேள்வி சம்பந்

தமாக வேள்விச்சாலை அரங்கம் முழுவதும் பந்தல் போடப்பட்டு, மின்விளக்குகளாலும், வண்ண மலர்களாலும் அலங்கரிக்கப்பட்டு விழாக்கோலம் மேற்கொள்ளப்பட்டது. 12-3-95 அன்று காலை ஸ்ரீபாஷ்யம் அப்லாசார்யலு, ஸ்ரீராமச்சந்ராசார்யலு ஆகியோரால் ஸ்ரீசூக்தம் போன்ற பாராயண நிகழ்ச்சிகள் நடைபெற்றன. பின்னர் அன்றுமாலை, வசந்த மண்டபத்தில் வேள்விக்கான பூமிபூசை மேற்கொள்ளப்பட்டது. பின்னர் ஜீயர் சுவாமிகள் தலைமையில், தி.தி. தேவஸ்தானத்தின் உயர் அலுவலர்கள் உடன் இருக்க யாகத்திற்கான 'அங்குரார்ப்பணம்' நடைபெற்றது. மேலும் திருமலை ஜீயர் தலைமை வகிக்க, ஸ்ரீமாகண்ட்டி ஸ்ரீரங்காசார்யலு பிரம்ம ஸ்தானம் மேற்கொள்ள, ஸ்ரீசீதாராமசார்யலு வேள்வித்தலைவராக பங்கேற்க, தி.தி. தேவஸ்தான செயலாட்சித் தலைவர், ஆந்திர மாநில அறநிலையத்துறை ஆணையர், திருப்பதி தேவஸ்தான இணைச் செயலாட்சித் தலைவர், முன்னாள் தேவஸ்தான பொறுப்பாண்மைக் குழு உறுப்பினர் திரு. பி. வெங்கடேஸ்வரலு, தர்மபிரசார பரிஷத் செயலர் திரு. மேடசானி மோகன் ஆகியோர் ஹோம குண்ட எஜமானர்களாகத் திருமலை ஜீயர் அவர்களால் நியமிக்கப்பட்டனர்.

அடுத்த நாள் 13-3-95 அன்று காலை 6 மணி அளவில் யாக சாலையில் 'கலச ஸ்தாபனம்' மேற்கொள்ளப்பட்டது. பிறகு ஸ்ரீ பத்மாவதி தாயார் ஹம்ஸ வாகனத்தில், சக்கரத்தாழ்வார் முன்செல்ல திருவீதி திருவலம் வந்தார். காலை 9 மணி அளவில் அரணிக்கட்டை மூலம்



அக்னி மதனம் எனும் தீப்பொறி உண்டாக்கும் புனித பணி மேற்கொள்ளப்பட்டு, ஹோமகுண்டத்தில் அக்னி பகவான் பிரவேசிக்கப்படும் திருப்பணி நடைபெற்றது. பிறகு துவஜாரோஹணம் மேற்கொள்ளப்பட்டு, ஆஸ்தான மண்டபத்தில் 'ஸ்தபன திருமஞ்சனம்' எனும் இரண்டுமணி நேர நிகழ்சிகள் திரு. எம்.ஜி. சாரி தலைமையில் நடைபெற்றது. கும்பகோணத்தைச் சார்ந்த சக்ரபாணி பட்டர் அவர்கள் மேற்படி அபிஷேகத்தினை நடத்திவைத்தார். பின்னர் சின்னஜீயர் தலைமையில் ரூ. 25 செலுத்தி பக்தர்கள் பலர் கலந்துகொண்ட லக்ஷ்மீ பூஜை நடைபெற்றது. இதுபோது, இவ் வேள்வி நிகழ்ச்சிகளைக் காண வந்த ஏற்பேடு வியாசாஸ்ரமம் பீடாதிபதி ஸ்ரீவித்யானந்தகிரி சுவாமிகள் வாழ்த்துக்கள் பல கூறினார். பின்னர் பிரவசன மண்டபத்தில் விஷ்ணு ஸஹஸ்ரநாம பாராயண நிகழ்ச்சிகள் மேற்கொள்ளப்பட்டன. அன்று மாலை ஆஸ்தான மண்டபத்தில் பத்மாவதி தாயார் வீணை மீட்டும் சரஸ்வதி கோலத்தில் அமர்ந்து பக்தர்களுக்கு அருள் பாலித்தார். அன்று இரவு தாயார் கோயிலுக்குத் திரும்ப அன்றைய நிகழ்ச்சிகள் முடிவுற்றன.

இரண்டாம் நாளான 14-3-95 அன்று காலை நடைபெற்ற சுப்ரபாதத்திற்குப் பிறகு, ஸ்ரீபத்மாவதி தாயார் அனுமந்த வாகனத்தில் எழுந்தருளி பக்தர்களுக்கு அருள்பாலித்தார். வேள்விச்சாலையில் பிரபந்த பாராயணம் நடைபெற, ஆஸ்தான மண்டபததில் கர்நாடக மாநிலத்தைச் சார்ந்த ஸ்ரீவரதராஜ பட்டர், பதரி நாராயண பட்டர் தலைமையில் அபிஷேக நிகழ்ச்சிகள் மேற்கொள்ளப்பட்டன. அன்று மாலை தாயார் அனந்தன் மீது எழுந்தருளி, 'சேஷசாயினி'யாக ஆண் உருவத்தில் பக்தர்களுக்குத் திருவருள் புரிந்தார். திரு. மாகண்ட்டி ரங்காசார்யலு, உ.வே. கோபால கிருஷ்ணமாசார்யலு ஆகியோர்



தாயாரின் புருஷாகாரத் தன்மையை விளக்கிப் பேசினர்.

மூன்றும் நாளன்று தாயார் கருடவாகனத்தில் எழுந்தருளி திருவீதி வலம் மேற்கொண்டார். அன்று காலை நடைபெற்ற ஸ்தபன திருமஞ்சன நிகழ்ச்சியில், முன்னாள் தி.தி. தேவஸ்தான செயலாட்சித் தலைவர் திரு. டி.வி.எல். என். மூர்த்தி, திரு. ஜி. குமாரசுவாமி ரெட்டி ஆகியோரும் பங்கேற்றனர். அன்று மதியம் நடைபெற்ற லக்ஷ்மீ பூஜையில் நூற்றுக்கணக்கான பக்தர்கள் பங்கேற்றனர். அன்று மாலை 'காளியங்க மர்த்தன' திருக்கோலத்தில் பத்மாவதி தாயார் சேவை சாதித்தார்.

நான்காம் நாளான 16-3-95 அன்று ஸ்ரீபத்மாவதி தாயார் கஜவாகனத்தில் எழுந்தருளி நகர வீதிகளில் திருவீதிவலம் மேற்கொண்டு பக்தர்களுக்கு அருள் பாலித்தார். அன்று காலை நடைபெற்ற ஸ்தபன திருமஞ்சனம் எனும் அபிஷேகம் மற்றும் யாக நிகழ்ச்சிகளிலும், ஆந்திரமாநில அரசு அறநிலையத்துறை அமைச்சர் ஜி. முத்துகிருஷ்ணமநாயுடு, தேவஸ்தான செயலாட்சித் தலைவர் ஆகியோர் பங்கேற்றனர். கோயிலின் ஊஞ்சல் சேவை மண்டபத்தில் ஸ்ரீபத்மாவதி தாயாரின் திருக்கல்யாண உத்ஸவமானது வைணவ திருமணச் சடங்குகளைப் பின்பற்றி வெகுச்சிறப்பாக நடைபெற்றது. இதுபோன்ற தாயாரின் திருக்கல்யாண உத்ஸவம் திருக்கோயிலில் நடைபெறுவது இதுவே முதல்தடவை என்றும் இந்நிகழ்ச்சி எதிர் காலத்தில் ஒரு வருடாந்திர கோயில் நிகழ்ச்சியாக இருக்க வேண்டும் என்றும், திரிதண்டி சின்ன ஜீயர் சுவாமிகள் தம் கருத்தைத் தெரிவித்தார்.







இறுதி நாளான 17-3-95 அன்று ஸ்ரீபத்மாவதி தாயார் ஸர்வ பூபால வாகனத்தில் எழுந்தருளி அருள் பாலித்தார். அன்று காலை நூற்றுக்கணக்கான பக்தர்கள் பங்கேற்ற லக்ஷ்மீ பூசைக்குப் பிறகு பூர்ணஹூதி எனும் 'விழா முடிவு' நிகழ்ச்சிகள் நடைபெற்றன. இப்பூர்ணுஹூதி நிகழ்ச்சிகளில் அன்று காலை திருச்சானூருக்கு வருகை புரிந்த ஆந்திர மாநில முதல்வர் திரு. என்.டி. ராமாராவ் அவர்கள, தம் துணைவியார் திருமதி. லக்ஷ்மிபார்வதி அவர்களுடன் பங்கேற்றூர். இது போது, முதல்வர் அவர்கள் காஞ்சி காமகோடி பீடம், புஷ்பகிரி பீடம், சிருங்கேரி மடம்,



ஏற்பேடு வியாஸ்ரமம் ஆகிய திருமடங்களைச் சார்ந்த பிரதிநிதிகளால் அம்மடங்களின் சார்பில் வாழ்த்தப்பட்டார். பின்னர் இவ் 'ஸ்ரீயாகத்தில்' பங்கேற்ற வேத பண்டிதர்களான 'ரித்விக்கு'கள் சன்மானம் அளிக்கப்பட்டு கௌரவிக்கப்பட்டனர். அன்று மதியம் துவஜாவரோஹணம் எனும் கருடக்கொடி இறக்கல் நிகழ்ச்சி நடைபெற்றது.

இவ்வைந்து நாட்கள் நடைபெற்ற ஸ்ரீயாகத்தின் போது சுமார் 15000 பக்தர்கள் ரூ. 25/- செலுத்தி 'லக்ஷ்மீ பூஜை' எனும் சிறப்பு நிகழ்ச்சியில் கலநது கொண்டனர். மேலும் இவ்யாகத்திற்காக நாட்டின் பல்வேறு பகுதிகளிலிருந்து வருகை புரிந்த பக்தர்களுக்கு அன்னதான வசதி வழங்கப்பட்டது. இவ்வைந்து நாட்களின் போது காலை முதல் இரவு வரை தி.தி. தேவஸ்தானத்தின் தர்மபிரசார பரிஷத், அன்னமாசார்யா திட்டத்துறை, ஆழ்வார் திவ்ய பிரபந்தத்திட்டத்துறை சார்பில் சமயம் மற்றும் இசை நிகழ்ச்சிகள் நடைபெற்றன. மேலும் தி.தி. தேவஸ்தான சமய நூல் விற்பனை நிலையம், ஆயுர்வேத மருந்து விற்பனை நிலையம் ஆகியனவும் செயற்பட்டன.

இவ்வைந்து நாட்கள் நடைபெற்ற ஸ்ரீயாகத்திற்காகப் பல்வேறு நிலைகளில் பணிபுரிந்த சுமார் 2000 தேவஸ்தான ஊழியர்களை, திரிதண்டி சின்ன ஜீயர் சுவாமிகள் ஒவ்வொவருக்கும் 'லக்ஷ்மி' உருவம் பொறிக்கப்பட்ட பதக்கங்கள் வழங்கி பாராட்டினார்.



## நூல் மதிப்புரை

### ஞானசர நூல்

ஆசிரியர் : பி.ஆர். கிருஷ்ணன்

வெளியீடு : ஜகதாம்பா சேரிட்டபிள் டிரஸ்ட், 20, லிங்கிச் செட்டித்தெரு, சென்னை-600001.

விலை : ரூ. 25-00 (122+8 பக்கங்கள்)

**வாசி யோகம்** என்று வழங்கப்பட்ட மூச்சின் ஓட்டத்தை இயற்கை நெறிப்படுத்தி, நன்மை-தீமைகளை உணரும் முன்னுணர்வு - தொலையுணர்வு நுட்ப கலை பற்றிய நூல். சித்தர்களின் அரிய முறைகளை மூலச் செய்யுள்களுடன் விரிவுரையுடன் மேலும் தொடர்புடைய பல செய்திகளையும் இணைத்து வெளியிட்டுள்ளார் இந்நூலாசிரியர். சரம் பார்த்து, ஆயுட் காலத்தை அறியும் முறை, ஒளி வட்டத்தை அறிதல் (AURA READING), நோய் அறிதல், மரணக் குறி அறிதல், கர்ப்பக்குறி அறிதல் போன்ற பலவகை நிமித்தங்களை அறிந்து கொள்ளும் முறைகளைத் திரட்டித் தொகுத்தளித்திருக்கிறார். திரு. பி.ஆர். கிருஷ்ணன்.

மேனாட்டு ஆராய்ச்சியாளர்களின் ஒருங்கிணைந்த களக் கொள்கை (THE UNIFIED FIELD THEORY), மனித ஒளி வட்ட ஆய்வுகள் (BIOPHOTON EMISSION) கிரிலியன் போடோகிரபி (KIRILIAN PHOTOGRAPHY) ஆகியவற்றுடன் ஒப்பு நோக்கிவெளியிட்டிருப்பின், இந்நூல் அறிவியல் வளரும் இக்காலச் சிறப்பினை பெற்று எல்லோராலும் பாராட்ட பெற்றிருக்கும். விஞ்ஞானப் பார்வையிலிருந்து விலக்கப்பட்டு, யோக நூலாக அடிப்படை கருத்துக்களை அலச வேண்டிய ஒரு கட்டாயத்துடன் காணப்படுகிறது. பொன் மலர் நாற்றமுடைத்தாயின் நன்று.

-சித்தூர் ஏ. சுந்தரராஜன்.

### சாதன ரகசியம்

ஆசிரியர் : ஸ்ரீ அனுபவானந்த சுவாமி

தமிழாக்கம் : பன்மொழிப் புலவர் மு.கு. ஜகன்னாத ராஜா

வெளியீட்டாளர் : ஸ்ரீ அநுபாவனந்த கிரந்திமாலா, எம்.ஜி. ரோடு, பாபட்லா-522101 (ஆ.பி)

பக்கம் : 198; விலை: Popular Edition Rs. 35/-; Library Edition Rs. 70 /-; Superior Edition Rs. 200/-

ஸ்ரீ அநுபாவானந்த சுவாமிகளால் தெலுங்கு மொழியில் எழுதப்பட்ட நூலின் தமிழ் மொழி பெயர்ப்பு இது. மூலநூலின் பதினொன்றாவது பதிப்பு மட்டுமின்றி சமஸ்கிருதம், ஆங்கிலம், ஹிந்தி, வங்காளி, மலையாளம், கன்னடம், மராத்தி, ஒரியா போன்ற பல மொழிகளிலும் இது மொழிபெயர்க்கப்பட்டு லட்சக்கணக்கான வாசகர்களது அமோக ஆதரவைப் பெற்றிருக்கிறது.

சுவாமிஜியின் பிரதம சிஷ்யையான மாதாஜி தியாகேசானந்தாவுக்கு சுவாமி அவர்கள் எழுதிய ஆன்மீகக் கடிதங்களின தொகுப்பே இந்நூல் ஆகும். புரிதற்கு அரிய பல ஆன்மீகக் கருத்துக்களை அனைவரும் படித்துப் புரிந்து கொள்ளும் வகையில் மிக எளிமையாக சுவாமிஜி அவர்கள் எடுத்துரைத்திருக்கிறார்கள்.

37 கடிதங்கள் மூலம் ஆன்மீக வாழ்க்கைக்கு அடிப்படையான யமநியமாதிகளும், சாதன சதுஷ்டயமும் விளக்கி, சாதகனுக்கு வெளியுலகையும், அதிலுள்ள மக்கட் தொடர்புகளையும் எடுத்துக்காட்டி, அத்தொடர்பின் நெறிமுறைகளை விளக்கி, வையத்துள் வழ்வாங்கு வாழும் வழியை ஆசிரியர் அழகாக விளக்குகிறார்.

ஆசனம், பிரணயாமம், தியானம் போன்றவற்றின் உட்கருத்துக்கள் அழகாக விளக்கப்படுகின்றன. கட்டுரைகளைப் படிக்கையில் சுவாமிஜி நம்முடன் நேரில் பேசுவது போலவே உணர்ச்சி ஏற்படுகிறது.

தமிழாக்கமும் சிறந்த முறையில் செய்யப்பட்டுள்ளது.

ஸ்ரீ ராமகிருஷ்ணர், சுவாமி விவேகானந்தரைப் பற்றிய மேற்கோள்கள் அதிகம் ஆங்காங்கு காணப்படுவது சுவாமிஜிக்கு ராமகிருஷ்ண இயக்கத்துடன் உள்ள தொடர்பை நன்குப் புலப்படுத்துகிறது.

இந்நூல் ஒருமுறை தொடர்ந்து படித்து முடித்த பின் ஏதோ ஒரு பெரிய (ஆன்மீக) விருந்து உண்ட திருப்தி ஏற்படுகிறது.

ஆன்ம சாதகர்கள் அனைவரும் இந்நூலைப் படித்துப் பலன்பெற வேண்டுகிறேன்.



Published on behalf of T. T. Devasthanams by N. S. Ramamurthy, M.A., Editor and

Printed at T.T.D. Press by P. Mohan Rao, Manager, T.T.D. Press, Tirupati - 517 507

